ACC. NO. 45551

383

கடவுள் துணை.

விஸ்வகுலம் வெங்கடாசலபண்டிதர் குமாரர்

இயற்றிய

# முருகர் ஒயிற்கும்மி.

665



அமரம்பேடு

இரங்கசாமிமுதலியார் அண்டு சன்ஸ்

அவர்களாற்றமது

பூமகள்விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை:

1920.

நெ, 24. தாண்டவராயப்பிள்ளைவீதி.

உ

கந்தன்றுணை.

# முருகர்
# ஒயிற்கும்மி.

இஃது

விஸ்வகுலம்

வெங்கடாசல பண்டிதர் குமாரர்

இயற்றியது





அமரம்பேடு

இரங்கசாமி முதலியார் அண்டுசன்ஸ்

அவர்களாற்றமது

பூமகள்விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

சென்னை.

1910.

நெ. 24. தாண்டவராயப்பிள்ளைவீதி.



உ

கந்தநாதன்றுணை.

# முருகர் ஒயிற்கும்மி.

---

துதி கவி.

மந்திர சடாட்சர சண்முகவிலாச
　மணந்தவள்ளிச் சரிதையெனும் வண்மைதன்னை
விந்தைதரு மொயிற்கும்மி சங்கீதமாக
　மேதினியோர் படித்தெழுதி மிகக்கொண்டாட
பைந்தமிழா லடியேன்வா னுரைத்தபுன்சொற்
　பகருமொழிக் கருள்புரியும் பரமனீன்ற
சுந்தரஞ்சேர் திடமான கருத்தைக்கூட்டுந்
　தும்பிமுகக் கணபதியே துணைசெய்வாயே.

கும்மி.

தென்பரங்குன்றினன் மேவுங்குருபர தேசிகன்மேற்கும்மிப்பாட்டுரைக்க, சிகரத்திரு மகரக்குழை சிகமெய்ப்புகர் வடிவைத்தருந் தில்லைவிநாயகன் காப்பாமே. (க)

வள்ளியெனும்பசுங் கிள்ளையைக்கந்தன் மருவுங்கதையைக்கும்மியாக, வாழ்வுற்றிட நாவிற்றுதி மேவித்தருள் பாலித்திடும் வாலை மனோன்மணி தாட்டுணையே (உ)

சங்கரசம்பு சதாசிவனீன்றருள் சண்முகர்மேற்கும்மிப் பாட்டுரைக்க, தந்தக்கனி முந்திக்கிரி வந்தித்தருள் விந்தைக்குரு தந்திமுகவன் றுணையாமே. (௩)

மந்திரபூரணக் கந்தனைவள்ளி மணந்தசரிதை வகையறிந்து, வாசத்துடன் நேசப்பிர காசத்தமிழ் பேசப்புகழ் மண்டலமெங்கும் நிறைந்திடவே. (௪)

தேசஞ்சிறந்த குயின்மொழியைக்கண்டு காகந்தொனிசெய்தவாறதுபோற், சிந்தைக்கனி விந்தைப்பிர பந்தத்தமி ழந்தத்துடன் செப்புகிறேனொரு புல்லறிவேன். (௫)

காரிகைநன்னூ லிலக்கணங்கற்றுக் கவிசொல்லும்நாவலர் தங்கண்முன்னே, கல்லாதவன் இல்லாதவன் வல்லாண்மையாய் சொல்லும்பிழை கற்றறிந்தோர்கள் பொறுப்பீரே. (௬)

வாணிதமிழ்சித் தாத்திரிவருட மகாதிங்களேழ்த் தேதியினின், மறையோன்குரு விரையோன்தரு முறைதங்கிய விறையன்பதி மாந கரில்நன் னகர்வாசன் (எ)

விஸ்வகுலத்தி லுதித்தெழுந்தவேங்க டாசலமைந்த னுரைத்த கவி, விழையுந்தமிழ் தழையுங்கன கிளியுஞ்சிவ கழையுந்தரும் வே லன்கிருபைசெய் வார்விசமே (அ)

ஓங்கியநாகம் படம்விரிக்கக்கண்டு நாங்கூழுங்கூடவின் ருடுதல் போல், உலகந்தனி லிலகுந்தமிழ் விலைகண்டவ ரிலையங்கொரு வூமை கள்கண்ட கனுவதுபோல் (கூ)

வீசும்புகழ்தழைத் தோங்கிடவேவிசுவ வேதகுலத்தில் கன்றமி ழ்க்கு, வேலன்குண சீலனுமை பாலன்அனு கூலன்செயல் வேணுமெ ந்நாளுந் துணைநமக்கே (க0)

ஆழிப்பெருங்கடல் வெள்ளத்துக்கொப்பலை யாகச்சிறுவாய்க் கால் பாய்ந்ததுபோல், யானுங்கவி யேனென்றொரு தேனுங்கனிபோ லுஞ்சொல வாறுமுகப்பெரு மாள்துணையே (கக)

மட்டடங்காதேசெந் தாமரைப்பொய்கையில்கொட்டி ஒருபுற ம் பூத்ததுபோல், வாசன்புகழ்நேசன்திகழ் தேசந்தனிலே சம்பிர மாகவேசங்கீதக் கும்மிசொல்ல (கஉ)

முத்தும்பவளமுங் கோர்வை செய்தாற்போற் சித்தமகிழ்ந்து நன்றாகவுமே, முன்னோர்தமிழ் சொன்னாரென வென்னாசையி லிந்நா ளிலே மொழியுங்கல்விக் கருள்புரிவீர் (கங)

ஆதியந்தமுதற் காரணந்தன்னை யறிந்துநன்றாகத் தெரிந்துரை ப்பார், ஆடிப்பணி சூடித்தமிழ் பாடிக்கன வேடிக்கையி லானந்தங் கொண்ட ததிசயமே (கச)

வையம்புகழுங் கலைமுனிவன்சிவ மந்திரவேள்வி மலைக்கருகே, மவுனக்குகை யதனிற்சிவ தவமுற்றிய சுவனத்தொடு மாத்திரைக் கோலுந் துலங்கிடவே (கரு)

கையிற்பிடித்த திருவோடுங்கறை கண்டமுங்காதினிற் குண்ட லமும், ஈனிற்றிரு மேனிக்கொரு காவிக்குடைசோபித்திட காரண மாய்த்தவஞ் செய்தாரே (கசு)

சானகிமுன்வந்த யானதுபோலித் தவமுனிவன்றனைச் சோவெ ன்று, தாகக்கழை வேகத்திடு தேகத்திலே மோகித்திட தார்வனந் தன்னி லொருமானும் (கஎ)

பொன்னிறங்கொண்டு புளகிதமாய்மேனி பூரித்துபால்ய பிரா யமதாய், பூவைக்குரல் கூவித்தவ வேள்விக்கிரி மேவிக்கன போகப் பிழைத்திட வந்ததுவே (கஅ)

வந்தனைக்கண்டு கலைக்கோட்டுமாமுனி சிந்தைகலங்கித்திபங்கி வனம், மதனக்குளிர் விதனத்திலே மருகிச்செய லுருகித்திரு மானை மருவிக் கலந்தாரே (௧௯)

மங்காமலேரிஷி கெர்ப்பமிமைப்போதுந் தங்காதென்றேசொல் லும் வாறதுபோல், மதியைச்சிவ கதியைத்தரு மதனைக்கனி யதுவை த்திடல் வள்ளிக்குழிகனி யீன்றதுவே (௨0)

மானீன்றபெண்ணைத் தானகந்தன்னிலே வண்ணமணிக்குரல் ஓசையிட்டு, வாலக்குயில் மானுக்குல நீலப்பயிலுஞ்சோபிதம் மகவை வாய்விட் டழுததுவே (௨௧)

தேனுங்கனியுங் கிழங்கெடுக்கவென்று தேடியேவேடர்வரும்வ ழியிற், செடியிற்குர வடிவைத்தா வடிவைத்திட நடுவிற்சிறு செல்வி யைக்கையி லெடுத்தனரே (௨௨)

கையிலெடுத்தநன் ருகவுமேயந்தக் கானவர்சேரியிற் கொண்டு சென்றார், கனியற்புத மினிமைப்புகழ் மனிதற்புத வனிதைக்குற கா ரணமாக வளர்த்தாரே (௨௩)

ஆணிப்பவளக் கயிர்முறுக்கிய நிலக்தமுள்ளசிறு தொட்டில்க ட்டி, ஆசைக்குர லோசைதமிழ் பாஷைப்பல பேசித்தின மன்புட னின்றுதா லாட்டினரே (௨௪)

ஆரீரோபெண்ணே யாரீரோதண்ணே யாராரோரீயாரோ, நனி னத்துறு பழனக்கழை யிளவற்புத வளமைத்தமிழ் நாயகமே பெண் ணே கண்வளராய் (௨௫)

அன்னமேதேனேயென் கண்ணேமின்னேயென்று ஆவலுடன் கையில் தானெடுத்து, அணிபொற்கணை மணிவச்சிர புனிதத்தொடு வனிதைக்கனி யாடைவெகுபூஷ ணுதியிட்டார் (௨௬)

கொஞ்சிமதலையை முத்தமிட்டுமிகக் கோலப்பணிகண் மிகப்பூ ட்டி, கொத்துச்சர முத்துப்பணி வைத்துப்பதி சித்துப்பெயர் கொ ண்டுகுறவர் மகிழ்ந்தாரே (௨௭)

ஒன்றிரண்டாகி மூன்றுகிவய தோரைந்துதிங்களுந் தானுகி; ஓடித்தெரு வீதிக்குளே மேடச்சிகள் கூடித்தின வோவியமாக வளர் த்தாரே (௨௮)

மாதுவளரும் வளர்ச்சிகண்டேநம்பி மன்னனுமேமங்கை மாதர சும், மங்கைச்சிமிழ் கொங்கைக்குயில் தங்கப்பணிஅங்கத்திட வள் ளியம்மனென்று பேருமிட்டார் (௨௯)

காதுகுத்திபஞ்சு தக்கையிட்டுச்சின்ன காதுக்குக்காலாழி பீலி யிட்டு, கதிர்க்கிணை மதியைப்புனை கமலத்திருவதனத்திலே கன்ன த்தைக்கொஞ்சியே முத்தமிட்டார் (௩0)

பாடகந்தண்டை சிலம்பணிந்தார் பதக்கஞ்சுட்டி நுதற்கணிந்தார், பட்சத்தொடு மெச்சிப்புகழ் வச்சிரப்பணி யிச்சைப்பட பாவித்துநன்றாய் வளர்த்தனரே (௩௧)

மங்கையுமிப்படி வேடவர்சேரியில் வாசிபங்கொண்டு வளர்த்திடுகாள், வரிசைத்துரை மகளுக்கொரு மழைபற்புத வரையிற்கனமாரி யென்னும் பொழிந்ததுவே (௩௨)

வெள்ளிமலைத்திட வோரத்திலேதினை விதைக்கநல்ல நிலம்பார்த்து, வெட்டுப்பயி ரிட்டுத்தளிர் மிட்டுக்கதிரெட்டும்படி வேடுவரும் புனமறகாடுசெய்தார் (௩௩)

காடுவிதைத்துப் பயிராகித்தினைக் கதிரும்வாங்கி மணிபிடித்துக், காவிக்கிளி கூவித்தினை மேவிக்கதி சேரித்திட கண்டந்தவேடர் கவலைகொண்டார். (௩௪)

தந்தையுடன்மைந்தர் வந்துநின்றுநம்பி தங்கையெனும் வள்ளிநாயகியை, தனதாகியே சுனைமீறியே தினைதூவிப புனமீதிலே தங்கையுடன்காவல் வைப்போமென்று (௩௫)

என்றண்ணமார்கள்சொற் றட்டாமலேயந்த வேந்திழை வள்ளிசந்தோஷமதாய், இன்பக்கட றென்புற்றொரு சம்பிரமத்துட னம்பிக்கையோ சேந்திழையுமுயிர் பாங்கியுமாய் (௩௬)

நீருந்தினவனந் தன்னிலுபரப ணேறிநின்பலகைக் கவண்வாங்கி, நீலக்கிளி யோலப்பட சோலைத்துயின் மேலுக்கிட னின்றுவிழைகொண் டெறிந்தாளே (௩௭)

பூரணவேளவி மலைச்சார்பில்வள்ளி பொங்குந்தினைப்புனங் காக்கையிலே, புவனத்திலே தவமுற்றிய கவனக்குரு முனிபற்புத பொதிகைமாமலை விட்டிறங்க (௩௮)

கந்தனிருக்குந் தலந்தோறுஞ்சென்று கபடநாதன் சேர்வைசெய்து, காவித்திரு வேள்விக்கிரி சோபித்திட மேவிச்சிவ காரணமாமுனி வந்தாரன்றே (௩௯)

ஆலோலமாலோல மென்றுசொல்லிவள்ளி ஆனந்தமாகக் கவணெறிந்தாள், அசையத்தன மசையக்குட மிசையக்கன விசையிற்றொரு வாசைகுரண்மணி யோசைசெய்தாள் (௪0)

ஏகலாபர நாதன்முனிது வேதோவதிசயந் தானெனவே, இந்தக்குரல் சந்தப்பட வந்தத்தொடு விந்தைத்தொனி யிதுவும் பெண்குரல் தானென்று (௪௧)

யோகத்திலேகண்ணை மூடிநின்றார்சிவ யோகியெனுந்தவ மாமுனிவன், யோசித்ததை கேசித்துளம கூசிப்பிரகாசததுட னெண்டொடிவள்ளியைக் கண்டாரே (௪௨)

பூரணவாலை மனோன்மணியோயிவள் பூலோகரம்பையோ பொன்மகளோ, புவனத்திலே இவளுக்கிணை யெவளேச்சரி தருமோப்பிட பூமண்டலத்திலுங் கண்டறியோம் (௪௩)

என்றுமுனிவன் பாவனைதிரேயின்று எந்திழைவள்ளிதனைப்பார்த்து, வேதப்பிரவாகக்கட லாலசப்பரி தாபத்தொடு வேறுவயனமெடுத்துரைப்பார் (௪௪)

பேரென்ன ஊரென்ன ஆரம்மாநீசொல்லு பேதையரே பசுங்கோதையரே, பிரமித்துள மகிழக்குற மாயிற்கன வாமுற்றுனை பெற்றிடுந்தாய்தந்தை பேர்சொல்வாய் (௪௫)

சொல்லுவன்கேளையா மாமுனியேநாங்கள் சொற்றவறாத குறச்சாதி, சொந்தக்கிளை பந்தத்துவ மிந்தக்கிரி விந்தைப்புகழ் சூழுஞ்சிற்றூரங் குடியிருப்போம் (௪௬)

தந்தைநம்பிராசனெங் காயாவெந்தன் தாய்பேருநன்கை யென்றேசொல்லுவார், தவமுற்றிய வெசுந்தர மவுனங்கொண்டு புவனந்தனில் சாமிதிருநாமஞ் சாற்றுமென்றாள் (௪௭)

நானிலமெங்கும் புகழ்படைத்தவள்ளி நாயகியேசொல்லக்கேளுமம்மா, நாதும்பலகீதட பெற வேதங்களை யோதும்புகழ் நாரதனென்று பெயருரைப்பார் (௪௮)

கேளுந்தினைவனம் வாழ்மயிலேயுனக் கேத்தமணவாளன் பார்த்துவந்தேன், திருபைக்கடல் தருசுப்பிர மணியத்துறை யுனைமெச்சிய கிஞ்சுகம்போலடி கொஞ்சிடவே (௪௯)

வேதமுனிசிவ ஞானத்திலேயும்மை மெத்தபெரியோரென் றே ...றுத்தேன், விகடங்தொழில் சகடத்திலே புகழுக்கெடின் மகுடச்சடை வீணைக்கொண்டு முடித்தாயே (௫௦)

கந்தனைமேவிக் கலந்ததனாலுன் கனங்குறைபாமோ குறக்கொடியே, கள்ளத்தொழி லுள்ளத்திலே எள்ளத்தனை விள்ளத்தகா கபடமென்று நினையாதே (௫௧)

வேதஞ்சிறந்த தவமுனியேயுந்தன் வித்தைகளென்னிடஞ்செல்லாது, மெட்டுப்பயி லொட்டுக்குளிர் விட்டுக்கதை கட்டுக்கடை மேன்மைக்குறக்குல நாமல்லவோ (௫௨)

தேசங்தோறுங் குறம்பாடிக்கொண்டு திரியுமுங்கள் குறச்சாதி, சின்னத்தொழி லெண்ணத்திலே யுன்னிக்குலம் பின்னப்பட சிறுக்குலந்த தறியேன் (௫௩)

தாறுமாறாய்மொழிபேசாதே யுன்னைத் தவமுனியென்றுஞ்சொல்வாரோ சாதித்துளம் பேதித்திட வாதித்தனை யேதிப்படி சற்றுமறியாமற் பேசுகிறாய் (௫௪)

நள்ளுமெருநு பொதிசமர்தகதை தொல்லுலகோர் சொல்லக் கேட்டிலையோ, சோமத்தன பாரத்திலே சோதத்திலே தாயுற்றவர் சுப் ரமன்யக்கந்த நாதனல்லோ. (ருரு)

ஆர்சொன்னாரிம்மதி நாரதனேயிந்த வழகில்லாச்சொல்லையெடு த்துரைத்தாய், அடமுற்றெரு நடனத்தொழில் திடமுற்றயர் தட மிட்டிடு மப்புறம்போயிங்கே நில்லாதே. (ருசு)

வாலசரவண வேலனுனக்கேத்த மாப்பிள்ளைதான்வள்ளி நாயகி யே, வனமிருந்தொளி ரிங்கிதத்திரு மங்கிலியத்துட னுன்கழுத்தி லே மாலையிடசல்ல வேளையிதே. (ருஎ)

மெய்யன்புகொண்டசன் யாசியென்றேயிந்த வேளைமட்டுஞ்சும் மா நான்பொறுத்தேன், மிஞ்சுந்தொழில் வஞ்சந்தர நெஞ்சந்தனி லஞ்சம்படி வேடர்கள்தேடி வருவாரே (ருஅ)

வள்ளிபெனுஞ்சிறு பெண்ணேயுனக்கந்த மாப்பிள்ளைவேலனே தான்சரியாம், மானுஞ்சுக வேலும்விழி மேனுந்தனத் தானுந்சுர தா தக்னக்காலம் வரவில்லையோ. (ருகூ)

ஆரணியந்தனிலொருகொடியிலெந்த னன்னைமாரேழ்வருந் தா ன்வருவார், அம்மாவெகு திடமாயுயிர் படவேதனை தொடுவாருயிர் அப்புறம்விசனப் படவேண்டாம் (சுo)

நல்லசுபதின வேளையிலேயனே நாதன்சிவகிரி வேலனுமே, நாளை க்கலி யாணஞ்செய மேளத்தொடு தாளத்தொனி நாரதன்வேடிக்கை பார்ப்பேனென்றார். (சுக)

வீண்சம்பிரதாயம் படியாதேயிங்கே வேறேதொழிலில்லை யோ முனியே, வேசைப்படல் பொய்பேசச்சன் யாசிக்கித நேசிக்குமோ விண்ணாட்டு நாரதமாமுனியே. (சுஉ)

எந்தவிதஞ்சொல்லி வள்ளிக்குச்சம்மத மில்லையென்றே முனி தான்திகைத்து, பெங்கும்பிர சங்கந்தர தெங்கண்ணழல் பொங்கும் படி எங்கின்றேமூச்சை தாங்கினன்றார். (சுஉ)

செல்வக்குறமின் திருவடியைக்கொண்டு சித்ரமடலி லெழுதவ ன்றே, சிந்தித்தவள் கந்தர்க்கிணை பந்தம்தொடு சொந்தப்பட சேரு ம்படியாய் முடிக்கவென்று. (சுச)

பாதாதிகேச மூதற்பரியந்தம் பரிந்தோடிவள்ளித் திருவழகை, படியைத்திரு முடியைச்சுக மடவித்தருவொளியைத்தரு பார்த்து நன்றாக வளர்ந்தாரே. (சுரு)

கார்நிறங்கொண்ட குழலெழுதியதிற் கமலமல்லிகைப் பூவெழு தி, கருணைப்பெறு நுதலிற்புகழ் கமலத்திரு வழகைச்சரி கண்டுமன முங் கலந்தெழுதி. (சுசு)

வேல்விழிக்கஞ்சன மையெழுதியதின் மேலேதனுசு நுதலெழுதி, வீசும்புகழ் கேசந்திகழ் வாசன்மிர காசந்தா மேலேயதிலொரு பாட்டெழுதி. (௬எ)

வள்ளைத்தண்டைபோலே காதெழுதியதில் வச்சிரதோங்கல் முருகெழுதி, மாரன்குயில்கூறுந்தொனி மீறும்படிசேருஞ்சுக மன்மதபார்வையுங் கண்டெழுதி. (௬அ)

செண்பகம்போல்நாசி ன்டெழுதியதிற் சிங்காரமூக்குத்தி தானெழுதி, மாரன்குயில்கூறுந்தொனி மீறும்படி சேருஞ்சுக மன்மத பார்வையுங் கண்டெழுதி. (௬௯)

மோகனமுத்துப்போற் பல்லெழுதியதின் முல்லையரும்பு நகையெழுதி, முனிவோர்களு மினிதாயொரு மனதாகிய சனிபோலவு மோகித்தருந்தும் படியெழுதி. (எ0)

காமன்கணைதிட்டுஞ் சாணையைப்போலக் கபோலமிரண்டையுங்கண்டெழுதி, கதியஞ்சுக மதியுந்தா முதிருஞ்சுவை மதுரம்பெற கன்னிக்கமுகின் கழுத்தெழுதி. (எக)

கச்சணிகும்பத் தனமெழுதியதிற் காமசாத்தைக் கலந்தெழுதி கண்டஞ்சியே நின்றும்புகழ் கொண்டஞ்சுகமண்டும்படி கழையைப் போலிரு தோளெழுதி. (எஉ)

தங்கப்பணிகள் மிகவெழுதியதிற் சங்குமணியைக்கலந்தெழுதி தாகதொடு மோகக்கணை தேகத்திலே மோகித்திட சம்பிரமரேகையுங் கண்டெழுதி (எ௩)

மால்கண்வளருந் தளிருபோல்நல்ல வயிறுமுந்திச் சுழியெழுதி, மாரன்கணை மீறுங்கன தேருந்திருநாதந்தா மதனசன்னங்கடாமெழுதி. (எ௪)

கஞ்சமலர்க்கா மிரண்டெழுதியதிற் காந்தளம்பூவைக் கனிந்தெழுதி, கானக்குற மானைத்திரு மேனிக்கழ காவைதடொரு கற்பனையாயிடை கண்டெழுதி. (எ௫)

ஆசைவிளையும் ளஞ்சியத்தைப்பா மானத்தமாகிதன்கூட்டோடே, ஆருங்கலி கூறுஞ்செயல் தேருஞ்சுக மீறும்படி யல்குற்படத்தையுங் கண்டெழுதி. (எ௬)

வர்ணச்சரிகைத் துயிலெழுதிமன் மாதளம்பூவைச் சிறந்தெழுதி, மடமாதர்கள்திடமீறியே துடை தானொருபடமீதிலே வாழைநிகர்த்திடத்தானெழுதி (எஎ)

கண்டைப்போலமுழந் தாளெழுதியதில் நல்லவிராற்கெண்டை சேர்த்தெழுதி, நளினத்திரு வடிவைச்சொலு மொழியைத்திகமொளிவைத்தரு நான்முகன்புதகம் போலெழுதி. (எஅ)

வள்ளியழகைச் சுகமடலிற்கண்டு மகிழ்ந்துநாரத மகாமுனிவர், வாசனுக்கும் தேசனுக்கிவ ளேசமுற்றது வேமசத்துவ மாதிரக் கந்தனுக் கோதவென்றே. (எகூ)

வேள்விமலைப்புனம் விட்டகன்றேயந்த வேதமறைமுனி நாரதனும், விந்தைக்கிரி மைந்தர்க்கொரு பந்தர்க்கில ளந்தக்குயில் வேடிக்கையாய்வழி கூடிசென்றார். (அ0)

சித்திரமடலைக் கையிலேந்திக்கொண்டு சென்றமுனிவன்விரைந்தேகி, சேவற்கொடி கூவத்தினஞ் சோபித்திட வாழ்விற்றிடுஞ் சிவகுமாரனை வந்துகண்டார். (அக)

கண்டவுடன்முனி தெண்டனிட்டுஅந்த கந்தனையும்வல மாக வந்து, காதுக்குள்ளே யோதிச்செயல் போதித்தொரு மாதுற்றிடுக் காரணந்தான்சொல்லக் கேளுமென்றார் (அஉ)

ஐயனேயென்குரு வேசாமியிந்த அண்டருலகெல்லாம்பார்த்து வந்தேன், அதிமோகன ரதியோயிவள் சதிபூரணமதிதானென ஆச்சரியஞ்சொல்லக் கேளுமென்றார். (அங)

தென்பொதிகாசலம் விட்டிரங்கியிந்த தேசங்கள்சுற்றி வரும் வழியில், செகமோகினி யிவளோவென சுகமேவிய மகள்சிருடைதெய்வமடந்தையைக் கண்டுவந்தேன். (அச)

மின்னற்பிரகாச விளக்கொளியோயிவள் மெல்லியர்க்கெல்லாங் குலக்கொடியோ, வேதனிப்படி மாதொருத்தியை சூதெனக்கபடாய் விதித்தது வேடர்தினைப்புனங் காக்கவென்று. (அரு)

வாயினாற்சொல்லவுங் கூடாதுகண்டால் மற்றொருபெண்களைத் தேடாது, மங்கைக்கிவ ளங்கைப்பணி தங்கச்சிலை யுங்கற்பனை மானை மடலி லெழுதிவந்தேன். (அசு)

பன்னிருகண்ணினும் கந்தசுவாமிநீ பாருமென்றேமடற் கைக் கொடுத்து, பாதபொற்கம லாசனத்திலே நீசமுற்றொரு சூதகற்றியே பணிந்துநாரதன் தெண்டனிட்டான் (அஎ)

கந்தன்சுகமடற் கைதனில்வாங்கியே கண்சிமிட்டாமனின்றே திகைத்து, கவலைக்கடல் பெருகத்திரி புவனத்தினு மிவளுக்கிணை கண்டதில்லையென்று காதல்கொண்டார். (அஅ)

கண்ணேபொன்னேபெண்ணே வள்ளிவள்ளியென்று கையில் மடலைப் பிடித்துக்கொண்டு, காமன்கணை யைந்தும்பட சோபயமிக வேவந்திட கந்தன்மயங்கித் தளர்ந்தானே. (அகூ)

சுட்டிப்பிடித்தென்னைச் சேராயோபெண்ணே காமக்கவலையைத்தீராயோ, கமலத்திரு வதனத்திலே முகம்வைத்தொரு சுகம்பெற்றிதழ் கனியைநீதந்தா லாகாதோ. (கூ0)

பெண்கொடியேபசுந் தங்கமேநீசற்றே பேசினால் வாய்முத்தஞ்
சிந்திடுமோ, பேதகத்தொடு பாதகத்திநீ தோதகத்தொழி லேமிகுத்
தவள் பேசாமடந்தையோ சொல்லுமென்றார். (௯௧)

கண்ணிமைகொட்டாத தென்றவமோபெண்ணே காமக்களஞ்
சியமோவறியேன், கற்பகத்திரு வெற்படுத்துணை வைப்பதற்கொரு
வெற்படுத்தவர் கன்னஞ்சமேவடர் கண்டார்மயிலே. (௯௨)

வாலசன்னுசியோ பேசவொண்ணாதோசொல் மவுனமோசுகமா
தரசே, வாசகத்தொரு ரேசகத்திலே யாசையென்குர லோசையே
பட வாய்விட்டடங்காதே மையல்கொண்டார். (௯௩)

சித்தமிரங்கியுருகாதோ வுன்னைத் தேடியென்மோகம் பெருகா
தோ, தேகத்திலோ மோகித்தமை யோகப்பிர தாகப்பட செங்கை
ராமன்தொண்டு புரியேனோ. (௯௪)

வாய்திறந்தோர்மொழி சொல்லாயோவந்த மன்மதராசனை வெ
ல்லாயோ, மகுடத்தனபாரத்திலே சுகமுற்றனுபோகத்தொழில்மாரு
மல்தொண்டு புரியேனோ. (௯ )

கட்டிக்கலந்துசு கந்திரவுன்னைக் கட்டிப்பிடித்தேன் சுகமடமே
காமக்கணை மீறிச்சுக போகத்தொடு பூமிக்குளே கந்தர்மடலையும்விட்
டெறிந்தார். (௯௬)

வாலசுப்ரமன்ய வேலருமிப்படி மயங்கிமெத்தைதனி லேசாய்ந்
தார், மானார்சுக மீனார்விழி தேனுளிதுகாணமலே மாதுதெய்வானையு
மோடிவந்தாள். (௯௭)

அருகில்நின்றிடுமே நாரதரைக்கண்டு அன்னதெய்வானையு மென்
னசொல்வாள், ஆதியிற்கப டாய்விதித்திட சாதியிற்றொழிலோவுமக்
கிது அருந்தவமுனி வோர்க்கழகோ. (௯௮)

அன்னைதெய்வானையே சொல்லுவேன்கேளம்மா அடியேன்மே
லொரு தோஷமில்லை, ஆறும்படை வீடும்வினை யாடுங்குகை நீருஞ்
சுனை யாடியேசுற்றி வரும்வழியில். (௯௯)

வேள்விமலையென்னும் கானகத்திலங்கே வேடர்குறக்குற வள்
ளிதன்னை, விரிவாகியபரிபூரண மதுபோலவே சதிராயொரு மின்னை
க்கண்டேனென்று சொன்னதல்லால். (௧௦௦)

மங்களமாய்குற மானைமணர்ந்துநீர் மாலையிடுமென்றுபேதகமாய்
வடிவேல்விழி மடமாதையு மடியாளுமக் கடியாளென வாயினாற்சொ
ல்லவு மில்லையம்மா. (௧௦௧)

உண்டவீட்டுக்குநீ ரண்டகஞ்செய்தாயே ஓகெடுவாய்பாவி நார
தனே, யுள்ளாகநீ யில்லாமலே கள்ளாமொரு வள்ளாதேநீ யுன்னிட
சேதி தெரியாதோ. (௧௦௨)

இந்திரன்கண்ணே பசுங்கிளியேசும்மா யென்மேச்சமுசய மெ ன்றாதே, இனிதாகிய கனியாவதுந் தனதாகவே மனதாகுவ ரிஷ்ட ஞ்செய்வதுநீ கண்டாயே. (க0௩)

இத்தனையுஞ்செய்த கத்திரிகட்டவ னில்லையென்றே மொழி சொல்லவந்தாய், இதைநீயொரு கதைபோலவு மதியோதல விதி யோசொலு மென்றைக்குஞ்சந்தேகந் தீராதே. (க0௪)

குண்டுணிநாத னென்றுனையிந்தக் குவலயந்தன்னி லெடுத்து ரைப்பார், குடையாகிய நெறிபேசியே பரியாசமா யெனையேசுவர் கொண்டசின்னத்தனங் கூறுகண்டாய் (க0௫)

தொட்டிலைபாட்டித்தொடையையெருடிய தோதக வித்தையை யானறிவேன், சுபசோபன மதுபேசிட மூகமாயமோ இதுபாயமோச சுந்தரவள்ளியைப் போலெழுதி. (க0௬)

சித்திரமடலையென் சுவாமிக்குதந்துநீ மித்திரபேதங்கள் செய் யலையோ, தெரியாதுள மறியாததோ பெரியோர்தவ னெறிதானிதே சீக்கிரம்போவென் றெழுந்திருந்தாள். (க0௭)

சித்திரமெத்தையில் நித்திரைசெய்கின்ற செந்தில்வேலாண்டி யை தான்பார்த்து, தெய்வானையின் வைவோகமும் பொய்யேவென உய்யும்வகை தெளிந்துவிண்ணப்பஞ் செய்யலுற்றாள். (க0௮)

கந்தரேநீயொரு கம்பந்திரண்டானை கட்டவென்றேவிந்தகோ லங்கொண்டீர், கருணாகர மதுபோலவே குறமானையு மறவாமலே கா தல்கொண்டீரென்ன மேதகமோ க0௯)

என்னிலும்பார்க்க வதிசயமோவந்த வேடக்குறத்திமே லிச்சை கொண்டீர், எங்கும்புகழ் மாதோவிவ ளெங்குங்கிடையாதோசொலு மென்னைசொல்லியினி யாவதென்ன. (கக0)

அந்தப்புளிப்பு மறிந்துபாருமென் னுரைக்குமா குருபரனே, அயிலநேர்வழி பழிலாலையுங்கைலாகுட னெயிலாகவே யன்புடனே மணஞ் செய்யுமென்றாள். (ககக)

சந்தோஷஞ்சந்தோஷ மென்றெழுந்தார்கந்தர் தாகந்தெளிந்து மனங்குளிர்ந்தார், தனதாகிய மனையாளொரு தனதாகவே சரணாகதி தந்தேவிடைகொடுத் தேகுமென்றாள். (ககஉ)

வள்ளியிருக்குந் தினைவனச்சோலைக்கு வழியெங்கே சொல்லும் நாதனே, மறவாதொரு குறமாதையு முறவாகியே வரவேணுநீ வர வென்றடங்காத மையல்கொண்டார். (கக௩)

வில்லம்புகொண்டு வேடராசன்போலே வெற்றிமகுடமுடி புனை ந்து, வேலாயுத கோலாகல சிலாவது கூலாவா வேணுமென்றாரந்த நாதரும். (கக௪)

அப்படியேகந்தன் வேடுவர்கோலங்கொண் டாறுமுகமொருமு கமாய், அருமேமுனி பிறமேகவச குருவாகிய துரைவேலவ ரானந்தங் கொண்டுமுன் னேநடந்தார். (ககரு)

கந்தரும்நாரத ரும்வழிகூடியே காடுசெடியெல்லாந் தான்கட ந்து, கனிவாய்மொழி இனிதாகவே தினைதூவிய வனமேதெனக் கார ணமாக நடந்தாரே. (ககசு)

பொன்மலைபான ம நடந்தார்தவம் பொங்குங்குற்றால மலைந டந்தார், பொதிகாசல மதிலேசிவ கதியாகிய நதிசூழ்தவம் புரியுங் கோசிக மாமுனிவன். (ககஎ)

வெள்ளிடைக்கு மலையிதுவாமிங்கே மெத்தவுஞ்சித்த மனேகமு ண்டாம், வெருவாகிய கவமேவிய குகைபாரெனவிரைவாகவே விண் ணூட்டு நாரதன் சொன்னதுவே (ககஅ)

கந்தன் திகைத்து மதிமயங்கியந்தக் கானகமெங்குந் திரிந்தலைந் து, கனபேதையுன் மனதாகினென் றனதாகிய வனவாசமே கன்னி தினைவனங் காணீர்களோ (ககக)

போதனைக்குள்ளென்னை யாளாக்கியெந்தன் புத்தியைபேதகஞ் செய்தாயே, பொய்யோயிது மெய்யோவுன்றன் செய்கோலமோ யை யோவிந்த புலனிடத்தேனிலலை நாதனே (கஉ0)

சித்தமயங்காதே ஐயாவேவுன்றன் சிந்தையில் வேறெண்ணம் வையாதே, தேனூர்மொழி மானுளையும் பூணுமலே வீணுகுமோ சிக்கி ரம்வாருமென் சுவாமியென்றார். (கஉக)

மந்திரவெள்ளி மலைக்கருகேயந்த வள்ளிதினைவனந் தோற்றுது பார், மலையாதேநீ மெலியாதுவந் துலையேதினூரிலைபாரிது மான்மரு காகதிர் வேன்முருகா (கஉஉ)

சோலையிளங்குயில் மாமயிலாள்வள்ளி போலமென்குரல் பேசு கிறாள், தொனிமேயிவள் மணிபோதிகழ் பணிசேர்மொழி தினைகா தே சுந்தரா காதாரக் கேளுமென்றார். (கஉங)

காதாரக்கேட்டு முன்னேநடந்தார்முனி காலகெதிகொண்டு பி ன்றொடர்ந்தார், கருமாமுகில் நிரமோகுழல் தொனியோகுயில்நடை யோவிளி கந்தர்தரிசனங் கண்டாரே. (கஉச)

கண்ணுக்குள்ளேநின்ற கண்மணியோவந்த காமன் ரதியோகதி ர்மதியோ, கனசோபித மேனவேயிவள் தினமேவிய வனமேவருங் காரணமேதுசொல் வாய்முனியே. (கஉரு)

கோதையெனுஞ்சுகபேலதயரேயுன்மேல் காதல்கொண்டேனடி மாதரசே, கொஞ்சுங்குயில் மிஞசுந்தொனி நெஞ்சந்தனில் வஞ்சந் தா கூவுதல்லோவிளஞ் சோலையிலே. (கஉசு)

மானின்வயிற்றிலே பட்டருமியெந்தன் மாரைப்பிளக்குதடி மயி லே, வாவென்றனை மேவுந்தொழில் காவுங்கண தாவுண்டிட மன்மத ன்போற்கூட மாட்டேனே (கஉஎ)

வந்தவிருந்துக் குபசரித்தன்னம் வழங்காதபேருண்டோ வை யகத்தில், மானேகனி தேனேயடி தானேமய லானேன்முழு வஞ்சக நெஞ்சம் படைத்தாயோ. (கஉஅ)

சொன்னதெல்லாங்காதிற் கேட்கிலையோபெண்ணே என்னையுங் கண்ணாலே பார்க்கிலையோ, சோபந்தன வேலங்கனைதாபம் பெயர் நீவந்தெனை சொந்தமாய்க்கைவசம் செய்யாயோ. (கஉகூ)

பேசினதாற்குலம் தாழ்வாமோ யிளம்பேதையரேயுந்தன் வாய் நோமோ, பெண்ணேயடி கண்ணேமனம் புண்ணாகுது சொன்னேனு ந்தன் பேரென்னசற்றேநீ கூறுமென்றார் (கஙo)

கந்தனுரைத்த மொழிகேட்டுவள்ளி காதிலிருகையை வைத்து நின்று, கருணாகர வருணாசல வருவாய்துணை குருநாதனே காதிலுங் கேட்க விதியாமோ. (கஙக)

ஆகட்டுமென்று மனந்துணிந்துவள்ளி மோகித்தாந்தனைத் தா ன்பார்த்து, அடமோதன திடமோஅவ கடமோயென திடமீதிவர் யார்சொன்னமதியிது வேடுவனே. (கஙஉ)

வாய்திறந்தோர்மொழி சொன்னதென்னிட மாதவம்தானடிக ண்மணியே, மானகனே மீறுந்தன பாரந்தனிலேவந்துனை மருவியே மோகந் தெளியேனோ. (கஙங)

மெத்தபடித்தவன் போலேவந்தாய்நீ பித்தப்பிடித்ததோ வேடு வனே, வேலுந்துணை கேழுந்துறங் கோலஞ்சுக காலங்கதை வீணாகநீ தொட்டலையாதே. (கஙச)

ஏதடிபஞ்சமா பாதகியேமுன்னே வாதுசெய்யாதே யழிகாரி, இன்பாய்வெகு சம்பந்தமா நம்பும்வுனை எண்பங்கிலே என்றைக்கனு க்கிரகஞ்செய்வாயோ. (கஙரு)

எட்டாததேனுக் கொருநொண்டியன்னாந்து கொட்டாவிவிட் டகதைபோல, எங்கிக்கனை தாங்கிப்பினை வாங்கிமிக ஒங்கியெதிர் என்முன்னே நில்லாதே வேடுவனே. (கஙசு)

இப்படிநீமுழு வஞ்சமாயென்னை கற்பனைசெய்வானேன் மாத ரசே, ஏழைக்கொரு வாழைக்கனி வேளைக்குத வாதிப்படி இன்ன மும்மர்மம் விடாயோநீ. (கஙஎ)

அண்ணமாரம்புகொண் டேவருவாருன்னை அழித்துக்குலையை ப்பொழிந்திடுவார், அங்கந்துளை பங்கம்பட வெங்கம்பிர சங்கந்தர அற்றுவிழத்துண்டு செய்திடுவார். (கஙஅ)

அற்றிருந்தண்டாய்கான்பட்டா லும்வேடாற்றுவிழக்கணைதொட்டாலும், ஆசைக்கொரு நாளைத்தினம் பேசிச்சுகதாயத்தாட னன்றிலும்பேடுப்போற் கூடேனே. (௧௩௯)

சுற்றிசுற்றிவட்டம் போட்டுவனமெங்கும் கத்தியின்றேங்கி மெலியாதே, சொல்லக்கணையில்லைப்படி கள்ளத்தொழி லுள்ளத்திலே தோழியரைவிட் டடிக்கச்செய்வேன். (௧௪0)

மங்கையர்கையி லடிப்பட்டால்நான் தெய்வகங்கையாடும் பலனைப்பெற்றேன், மயிலேகுற மயிலேகுறக் குயிலேவிழி துயிலேனடி வந்தொரு முத்தந்தாராயோ. (௧௪௧)

எதுபரியாச மிஞ்சுகிறாய் பெண்கள் சேதியறியாமற் கொஞ்சுகிறாய், இனிமேலுனை முனிவேன்பயஞ் செனியாமலே துணிவாகநீ என்னகோலஞ்செய்ய வந்தாயோ. (௧௪௨)

கோலமெலாங்காமக் கோலமல்லால்வேறே கோலமுண்டோவுன் மேல் மயலானேன், கூவுங்குயில் மாவுங்கனை நாகஞ்சுக மேவுக்தொழில் கூடும்பருவ மிதுவுனக்கே. (௧௪௩)

கொம்பிளவிற்பட்ட மந்தியைப்போல்நின்று வெம்பித்திரிந்து மெலியாதே, மண்டாய்மனங்கொண்டாய் மயல்தாண்டாகுவாய்சொன்னேனன்னார் காணாமலோடுவாய் வேடுவனே. (௧௪௪)

பஞ்சையைப்போல்நின்று மெஞ்சுவேனோவடி வஞ்சியுன்வேல் விழிக் கஞ்சுவேனோ, பழியாகியமொழிபேசுவ ரடியேன்மனத்தொழியாதடி பாவியுன்சித்த மிரங்காதோ. (௧௪௫)

ஆர்குடிதன்னைக் கெடுக்கவென்றேயிவ னண்டிவேஷங்கொண்டுவந்தாயோ, அவதூறிது புவிமீதிலே சிவனார்செயலதுபாரடி வன்னமேயென்னுயிர்ப் பாங்கியரே. (௧௪௬)

பாங்கியருமந்த வேடனைப்பார்த்துப் பதைத்துநின்றே மொழி சொல்லலுற்றார், பழிகாரனே தெளிவாகநீ மொழியாதேபோய்வழி கூடுவாய் பாங்குகுலைந்திட காளாச்சோ. (௧௪௭)

இங்கிதமென்மொழிப் பாங்கியரேநீங்க ளெனக்கும்வல்லிக்கும் பொதுவாமே, என்றுந்தன் தென்றுந்தனை யென்றும்மறவென்றும் மினி என்றைக்குங்கீர்த்தி யுண்டாகுமென்றார். (௧௪௮)

வங்கணமுள்ளவன்போலேவந்து பெண்ணைவாதிட்டுஎய்க்கவென் றிங்குவந்தாய், மதமோவெனவிதமோயிது சதமோதுராகிதமோ விது மார்க்கமல்லவன்றோ வேடுவனே. (௧௪௯)

நம்பினபேரை நடுங்கச்செய்தல்நம்பன் நன்றென்றுமக்குத் துணைசெய்வானோ, நாடுஞ்செயல் கூடுஞ்சிறு பேடுஞ்சரி சோடுந்தாநன்முகனோன்மணஞ் செய்வேனென்றார். (௧௫0)

கந்தனும்வள்ளியும் பந்தயமாய்நின்று கைச்சரசமிஞ்சும்வேளையிலே, கதருங்குட அதருங்குலை யுதரும்பொழி சிதறும்படி கானக் குறவர்கள் வந்தாரே. (கக)

கானகந்தன்னிலே வேடர்வரவுமெய்ஞ் ஞானக்குமரகுருபரனும், கண்டஞ்சியே நின்றுஞ்செயலென்றும்புகழ் குன்றந்தனில் காரணமாய்கையாற் காட்டிலொன்று (கருஉ)

பூவுந்தழையுங் குலுங்கியபிஞ்சுதாய் புதுமைபாகவளர்ந்தோங்கி, பொங்கும்வன மெங்கும்மிரு டங்குங்கிழலெங்குந்தா பூரித்துவேங்கைமரமானார். (கருங)

வாதெல்லாம்போய்முளைத்திடும்வேங்கை மரத்தையுங் கண்டுமதிமயங்கி, மலைவேடர்கள் சிலர்கூடியே பலயோசனை செய்தேயிது வஞ்சனையென்று நினைந்துசொல்வார். (கருச)

என்றுமில்லாவிந்த வேங்கைமரமிங்கே யின்றைக்குவந்து முளைப்பதென்ன, ஏதோயிது சூதோவென தீதோதெரியாதேயென ஏந்திழைவள்ளியைக் கேட்கலுற்றார். (கருரு)

தங்கையெனும்வள்ளி நாயகியே அம்மா எங்கள்குலக்கொழுந்தேகேளாய், சதிராகவன் னெதிரேயொரு விதிகாரணமிதுவேதெனதயவாகவேவள்ளி சாற்றலுற்றாள். (கருசு)

விள்ளுகிறேனினி யண்ணமாரேயந்த வேங்கைமுளைத்ததையானறியேன், விளையாகவே தினைதாவியே வனமீதிலே கனிபோலவே விம்புக்குவந்து முளைத்ததென்றாள். (கருஎ)

பைங்கொடிவள்ளி யுரைத்ததைக்கண்டந்த கந்தன்செயலென்றுவேடுவரும், பாஷைக்குற லோகசப்படி நேசத்துடன் பேசித்தினம் பாலவனத்தி லதிசயமே (கருஅ)

தங்கைக்குவேங்கை மரந்துணையாய்நல்ல தாவல்யமாய்வெகுசோபிதமாய், தங்கும்புனல் பொங்கும்வன மெங்கும்நிழல் தங்கும்படி சண்முகநாதன் றுணையிருப்பான். (கருகூ)

ஏதுக்குமஞ்சாதே மாதாசேநாங்கள் சோதிக்கநிர்கொய்தேவருவோம், என்றுந்திகழ் கண்டுங்கன குன்றம்பதிசென்றுஞ்சில வேடக்குறவர்கள் போனபின்பு. (ககூ0)

வேங்கையாய்நின்ற வுருமாறியந்தச் சாங்கேயன் வேடர்வடிவாகி, விரகத்தமை பெருகிச்சுடும் ராகத்தொடு மருவிக்குற மெல்லியர் தம்மிட மேதுசொல்வார். (கசுக)

உன்னைமறக்கப் படவில்லையேபெந்தன் கண்ணுக்குறக்கம்வரவில்லையே, உனதாசையின் மனதாகவே வினைவாகுமவனதாகநீ யுற்றதுணையென்று நம்பிவந்தேன். (கசுஉ)

ஆசைகொண்டபேர்க்கு ரோஷமில்லையென்று பேசவந்தாயிது வேடுவனே, அடமாகிய மடவார்களி னிடமேவரு கடனேதினி யா சாரங்கெட்டவ னீயல்லவோ. (கசரு)

ஆசாரமுங்கள் வாசாரமேபெண்க ளாசாரமெல்லா மறியேனோ அடிபாதகி கொடுதாகநீ முடியாய்மனம் படையாதேநீ அன்னமே தேனே பெண்மயிலே. (கசச)

வம்புக்குச்சண்டை வளர்ப்பதில்லையெந்தன் கும்புக்குறக்குலம் வேடுவனே, வாதும்பல சூதுங்கன தீதும்பலி யாதெங்களை மாராட் டஞ்செய்ய முடியாதே. (கசரு)

வம்பிலேமாபாவி நாதன்வார்த்தையை நம்பிவந்தேன் மதிகெ ட்டலைந்து, மதனன்கணை யதுவந்தெனை நிதமுந்தவ சிவசிந்தனைமதி யும்பேதக மானதுவே. (கசசு)

கண்மணிபாவையை யெட்டியெட்டிச்சும்மா கையிற்பிடித்தா லகப்படுமோ, காடுந்திட மேடுஞ்சிறு யோடுங்குயில் பாடுந்தொனி காமசாத்தை விளைத்ததென்றார். (கசஎ)

அந்தட்சணத்திற் குறவருமன்புடன் வந்ததைக்கண்டு கபடமதாய், அருள்வேலவ னொருமாதவ வுருவாகியே குறவோர்க்கண்முன ங்கப்வெடுவெடுத் தாடிநின்றார். (கசஅ)

தொண்ணூறுஞ்சென்றகிழவனைப்போலுடல் தொங்கியேகண் களும்பஞ்சடைந்து, சுழல்வாய்மொழி குளர்வாகிய தளர்வாய்முதி ர்ப்பழமாகவே ரேன்றியேகாஷாயம் பூண்டுநின்றார் (கசகூ)

கொட்டியபஞ்சைப்போ லேநரைத்துப்பல்லுங் கிட்டியேவாய் நீர்வழிந்தொழுக, கோலஞ்சுக காலம்பணி தாளப்வெகு காலந்தனே தொண்டுகடந்த பெரியவர்போல். (கஎ0)

செம்புலித்தோலும்விபூதிபஞ்சாட்சரத் தண்டுகமண்டலங் கை பிடித்து, சிவனே அருள் பவனேயினி யவனேதுணை கதிநீயென தெ ளிந்தயோகியைப் போலேநின்றார். (கஎக)

கானகந்தன்னிற் றபோதனர்வந்ததும் காரணந்தானென்று பூ ரணமாய், கனவேடர்க ளனைவோர்களு தனதாயொரு மனதாகவே கழலினைப்போற்றிப் பணிந்துசொல்வார். (கஎஉ)

ஐயாவேபண்டார சுவாமிநீ யெங்களை யாண்டகுல தெய்வம் போலவுமே, அடிமேலடி தடுமாறியே கொடிதாகியசுடுகானிலே அங் கம்மெ ாருந்தவே எங்குவந்தீர். (கஎங)

வேங்கையுங்காட்டு மிருகங்களுக்கெல்லாம் பாங்குடன்தப்பிப் பிழைத்துவந்தீர், விதிகாரண மதுபார்வளர் பதிதானிது எதுவோ சொலவேணுமென்றார்ந்த வேடரெல்லாம். (கஎச)

சொல்லுவேன்கேளுங்க ளையமாரேவெகு தூரம்வடகைலாசம் விட்டு, தூங்காமதிகங்காசல மங்காமலுகந்தாடியே தொல்லுலகெங்க ணுஞ் சுற்றிவந்தேன். (கஎரு)

தென்டிசைசூழும் பதியருணாசலஞ் சீர்காழியென்றுஞ் சிதம் பரத்தில், சித்தம்பெற வைத்தம்பல முற்றம்பரி சுத்தந்தா மேதேசி யொருபலங் கிட்டாமல். (கஎசு)

கண்டிகதிர்காமங் கோசலதேசங் காசியிலுமதுவாசியென்கன், கண்டும்பல னுண்டெஞ்செயல் கொண்டும்புக ழொன்றுந்தருங் கன்னி யாகுமரியாடவந்தேன். (கஎஎ)

சத்தமுஞ்சுத்தமும் வேறுபட்டுத்தலை சுற்றியேபுத்தியுங் கூறு கெட்டு, தள்ளுங்குலை துள்ளுந்துய ருள்ளுந்துணை கொள்ளும்வெ குதாவந்தமாகிய வேளையப்பா. (கஎஅ)

உங்களைதஞ்சமென் றேநம்பிவந்தேனு னங்கைகுறக்குல வேடு வரே, உலையாமென கலையாதொரு நிலையாவிட மிலையோவெனக் குண்மைசொல்வீரெங்க ளையமாரே. (கஎகூ)

அப்படியேயுங்கள் சொற்படி கேழ்க்கிறோ மன்புள்ள தங்கை பொருத்தியுண்டு, ஆடுங்கயல்கூடும்விழி நீடுங்கிளைநாடும்புன மேதேச யிருக்குது வாருமென்றார். (கஅ0)

மெள்ளமெள்ளக்கை பிடித்துபன் டாரத்தை வேடிக்கையாக நடத்திக்கொண்டு, வேலன்செய லாலேயனு கூலம்பெறவந்தேயவர் மெல்லியர்க்கேதுணை யாகவைத்தார். (கஅக)

தங்கமேபெண் குயிலேமயிலேவள்ளித் தாயேநம்குலசாமியைப் போல், தாபந்தம தாய்வந்தவர் சோபங்கள பாவம்பிற தஞ்சமென் றோர்களைத் தள்ளுவரோ. (கஅஉ)

ஆனாலுமிந்தப் பரதேசியோமெத்த அதிதியைப்போலவுங் கா ணுதம்மா, அன்பாயிவ ரின்பால்மிக வன்பேசெய்து உன்பால்கிரு பையாகவனந்தஞ் சுகமிதென்றார். (கஅங)

நல்லதினைக்கொய்து போம்போதுங்களை நாங்களுங்கூட்டியே செல்வோமென்று, நன்றாய்மன மொன்றாகவே சென்றார்மதி கண் டார்குற நம்பியும்வேட ரனைவோரும். (கஅச)

தந்தையண்ணன்சொல்லைத் தட்டாமல்வள்ளி சிந்தைதெளிந்து மனங்குளிர்ந்து, தாகத்தோடு மோகித்திடு யோகப்பர தேசிக்கிவ ளாசனமென்றிரு கைகுவித்தாள். (கஅரு)

ஆண்டவனேபன் டாரமேபோற்றியென் னையனேயெங்கிருந் தெங்குவந்தீர், ஆடம்பர வேடம்புனை நீடம்பர வாடுஞ்செய லங்கந் தளர்ந்திடுங் காலத்திலே. (கஅசு)

மாதவரேசிவ சங்கமரேஐயா வேதமெய்ஞ்ஞான தபோதனரே, வாரும்பா னேருங்களை நீருந்திகை யாருந்தினை மாப்பலகாரங்கொடுத்திடுவேன். (கஅஎ)

கார்த்தபொருளைக் களைபோகாக்காரடி பேத்தியானேமைப்பண்டாரமல்லோ, கண்டுந்தனை கொஞ்சஞ்சுக மென்றும்பல னுண்டாம்படி காப்பாற்றவேணுங் கடனுனக்கே. (கஅஅ)

நல்லதுபண்டாரஞ் சுவாமிசற்றேபொரு உள்ளதுபோலே பசிக்கமுது, நாவும்முணர் வாகத்தினை மாவும்பிசுத் தேனும்பழம் நான் கொண்டுவாறேனென் றேயெழுந்து. (கஅகூ)

செந்தினைமாவை யிடித்துப்புடைத்துத் தெள்ளியதேனைவிட்டுப்பிசைந்து, தேறுங்கனி மீறுஞ்சுவை யாருங்களிகூரும்படி சித்திரமாய்பல காரஞ்செய்து. (ககூ0)

தேக்கிலைகொண்டத்தைத் தொன்னைதைத்துஅதில் தேனுந்தினைமாவை முன்னேவைத்து, சிறியாளுமை யறியாதவள் தருபோசனம்பரிபூரண தேவாவுண்டுபசி யாறுமென்றாள். (ககூக)

மாப்பலகார மிந்தாருமையாசும்மா சாப்பிடுஞ்சாமியென் றே கொடுத்தாள், வாசம்பலகாரத்தையு மாசைப்படநேசித்தவர் வஞ்சகமாய்தினை மாவையுண்டார். (ககூஉ)

உண்டந்தமாவை நன்றாகவிழுங்கவே யுருண்டுசுருண்டு கண்ணீர்ததும்பி, யோடிக்களை மூடியுடல் வாடிக்குடை லாடிப்பரந் துள்ளுடைந்தங்கந் தள்ளாடையிலே. (ககூங)

கண்டந்தவள்ளி திடீரென்றெழுந்துதன் கைகால்பதறிவோடி வந்து, கைலாகுடன் மயில்வேலனை குயிலாள்குற ஓயிலாள்தானுங் காதினிற்சுக்கைவைத் தூதினின்றாள். (ககூச)

பெண்ணேயென்றாரோடி முன்னேவந்தாளடி பேத்தியென்றார் வள்ளிபோற்றியென்றார், பேதைத்தினை மாவைக்கனமாதேதர நீவைத்தது பேதகமென்றுந் தெரிந்திலனே. (ககூரு)

மாவென்றுசொல்லியே நஞ்சைதந்தாய்பாவி தாவென்றுசொல்லியே வாங்கியுண்டேன், சதியோவிதுவிதியோவென கதியோதலைவிதியோயினி வரதென்னவென்னுயிர் போகுதென்றார். (ககூசு)

தொண்டையைச்சுற்றிப் பிடிக்குதடிவுயிர் கண்டதில்லையின்று துடிக்குதடி, குதுங்கன தீதுஞ்செய லேதுந்தெரியாதெந்தனை தோதகஞ்செய்யத் துணிந்தாயே. (ககூஎ)

எட்டிக்கனியோசெங் கட்டையோபாஷாணக் கட்டியெனக்கென்றே தேடிவைத்தாய், ஏழைப்பரதேசிக்கிது வேளைப்பல னேயுற்றது இப்படியுஞ்சதி செய்வாயோ. (ககூஅ)

கன்னியாகுமரி யாடவந்தபலன் கைமேற் பலித்துதேசண்டாளி காதுக்குளே சிவக்கனை ஞூழுற்றுளம் பேதிக்குது கன்னியேதண்ணீ வேணுமென்றார். (ககக)

தண்ணீரென்றுள்ளந் தயங்கியபண்டார சுவாமி யீதுவென்ன கோலமையா, தலைநாள்விதி பலனோகெதி குலபாதக மலவோயிது சம்புசதாசிவன் சோதனையோ. (உ00)

கொம்புத்தேன்விட்டுப் பிசைந்தபலகாரங் கொண்டுவந்துண்ணக் கொடுத்தபலன், கோலஞ்சுக காலங்கலி காலம்மிது வேலன்செயல் கூற்றுவன்போல்வந்தி ராண்டவனே. (உ0க)

நன்மையே நான்செய்ய துன்மையென்றீரையா நல்லதுக்கோ யிது காலமல்ல, நானும்பல காரங்கனி தேனுந்தினை மாவுந்தர நஞ் சென்றுசொன்னீரே வஞ்சகமாய். (உ0உ)

தந்தையண்ணமார்க ளெந்தனுக்குன்னைச் சகுனியைப்போல வே கொண்டுவந்தார், காவுங்கனை யாவுங்குயிற் கூவும்புன மேவுஞ் சுனை தண்ணீர்சாப்பிடும் போற்றியென்றாள். (உ0ங)

இந்தச்சுனைநீ ருருந்தவென்று லிப்போ சந்தேகத்தோற்றுது வே ண்டாம்போ, என்பால்மன தன்பாலிரு கண்பாரடி பெண்பாவையே என்பழியையிங்கே காணுமென்றார். (உ0ச)

வம்புகள்கொண்ட பண்டாரமேயின்னம் வாயில்வந்ததெல்லாம் பேசுகிறீர், மாயன்விதி சூதென்பது ஏதுந்தெரி யாதிங்கினி வாரு மிந்தச்சுனை பாருமென்றாள். (உ0ரு)

கள்ளமில்லையிது நல்லதண்ணீரையா மெள்ளாயிறங்கிப் புசியு மென்று, கனமாகிய வனமீதிலே தனதாகிய சுனையீதென கன்னியும் மெள்ள விறக்கிவிட்டாள். (உ0சு)

தாகமுடன்சுனை நீரையள்ளிமிகப் பாகமுடனுண்ணும் வேளை யிலே, தடுமாறுதென் னடிசோறுது விடுமோபழி யடிபாதகி சற்றே யொருகையை நீட்டுமென்றார். (உ0எ)

ஆதாரமாய்தண்ணீர் கேட்டதற்கோ யென்னைப் பாதாளந்தன் னிலே தள்ளிவிட்டாய், அரனார்செயல் தருவாரடி குறமாதுனை மற வேனினி யாபத்துக்குப்பாவ மில்லையென்றார். (உ0அ)

கையைப்பிடித்தென்னைத் தூக்கடிபாவிநான் பையப்பையக்க ரைசேருகிறேன், கடிதேதுயர் கொடிதேவெயில் சுடுதேவுயிர் விடு வேனினி காலமெங்கேயிது கோலமென்றார். (உ0கு)

ஆருமற்றபா தேசியேயுன்கைத் தாருமென்றேவள்ளி கைபிடி த்து, ஐயாவொருகையாதா வையாயிது மெய்யாயிது ஆண்டவரே வாரு மென்றிழுத்தாள். (உக0)

சந்தோஷம்வள்ளிகை தந்ததேலட்சம்பொன் தானென்றுபண்டார மானந்தமாய், தாகத்தன போகத்தொடு மோகத்தனையே யுற்றவர் சம்பிரமாகத்தனை யேறிவந்தார். (௨௧௧)

கோகனகந்தூற மானையிருவருங் கூடினதாலொரு குற்றமுண்டோ, கோலத்திரு மேனிக்குயி லீலத்தொழி லேகற்றவன் கூசாமலெந்தனைச் சேராயோ. (௨௧௨)

பண்டாரமேயுன்னைக் காத்த பலனெனக்கும் பலித்ததேயிப்போதே கைமேலே, பாபந்தன சோபம்வெகு தாபந்தமதாய் வந்தெனைப் பாசாங்குசெய்தாயே பாதகனே. (௨௧௩)

புண்ணியமென்று நனைத்திறவாநல்ல தண்ணீர் கொடுத்தும்வீணுச்சே, பொல்லாதவன் நில்லாதபோ சொல்லாமொழி கல்லாதேநீ புத்திகெட்டவனே தூரநில்லு. (௨௧௪)

பிச்சைக்குவந்தவன் பெண்டுக்கு மாப்பிள்ளை யிச்சைகொண்டாலது நிச்சயமோ, பேதைதன மாயித்தனை குதூற்றிடு தோதக்கிழம் பேசட்டுமென்று நடந்தாளே. (௨௧௫)

அந்தமொழியை யறிந்துசிவகிரி கந்தனுஞ்சிந்தை மதிமயங்கி, அருமைக்குற மகளைத்தன முழுமைப்பட மனமுற்றவ ரானைமுகவனைத் தியானஞ்செய்தார். (௨௧௬)

மந்திரத்தியானமாய் கந்தனுரைத்ததை தந்திமுகவ னறிந்துகொண்டு, மலைமூடியே, சிலையோடவும் பிலமாகிய குலயானையாய் வள்ளியின்முன்வந்து தோன்றினரே. (௨௧௭)

வெண்ணிறங்கொண்ட வடிவாகித் தந்தி வீர்கொண்டு வள்ளிக்கெதிர்வரவே, வெருண்டஞ்சியே நின்றங்கன மருண்டுஞ்செடி பொன்றுங்கனை காளுயலேவள்ளி யோடிவந்தாள். (௨௧௮)

ஐயாவேபண்டார சுவாமிகளெல்லாம் யானைமிரட்டுதே கானகத்தில், உன்பாதமே நம்புமுனை என்பால்வரு துன்பந்தனை ஐயாவடைக்கலங் காருமென்றாள். (௨௧௯)

என்னையடியாகுகி நீயென்னைகொல்லவே முன்னமே மாவென்று வந்தாய், எந்தன்விதி முந்தங்கதி யுந்தாஞ்சதி கந்தன்செயல் எவமோதப்பிப் பிழைத்துவந்தேன். (௨௨௦)

தாகந்தனக்குத்தண்ணீர் வேறுமென்றேனுயிர் போகக்கிணற்றிலே தள்ளிவிட்டாய், தந்திரத்தலை சுற்றிச்செயல் முற்றிப்படி தொற்றிப்பிர தாபத்தொடுநான் வெளியில்வந்தேன். (௨௨௧)

மூன்றுவதானைப் கொண்டுவந்தாயையம் பூண்டாவியங்கந்துடிக்குதடி, மோசப்படி நேசம்விச வாசம்வெகு தோஷம்உனை முற்காலும்பப் படாதுகண்டாய். (௨௨௨)

என்னைவிலக்கி யிடுஞ்சுவாமி நாங்கள் சொன்னபடி. பெல்லாம் நான்கேட்பேன், இச்சைப்பட விச்சித்திரமெச்சுக்கன பட்சத்தொடு என்றைக்குஞ்சொந்தப்பெண் ணுவேனென்றாள். (௨௨௩)

பெண்களைநம்பியே பக்கமிருந்தவர் கங்குநாரையுண்டோ மங்கையரே, பெருங்குண மாறும்மிகழ் வாரும்பவ னாரும்வரும் பேச்சுவுறுதிக்கோர்சாட்சியுண்டா. (௨௨௪)

சொந்தமனையாட்டி என்றுநீ கைதந்து சிவன்பேரிலாணை யிட்டேகொடுத்தால், சோணைத்தட வாணைப்பயம் நானிப்படி மானத்தொடு தூரத்தள்ளியுனைக் காப்பேனென்றார். (௨௨ )

சொற்படியாணை யிட்டுக்கொடுத்தாள் வள்ளிகைப்பிடிநாயகன் நீயென்றாள், திடரும்பழி யடரும்வினை யடருங்கரி கடரும்பழிசொல்லும் யானையும்போனதுவே, (௨௨௬)

சேவலும்பன்னிரு தோளுங்கடம்பணி சென்னியோராறுஞ் சிறந்திலங்க, செம்பொற்றன பைம்பொற்குற மங்கைக்கெதிர் சம்பிரமத்தொடு சிங்காரவேலன்மயிற் சேவைதந்தார். (௨௨௭)

கண்ணாரக்கண்டவள் தானென்னவிது காரணமோ பரிபூரணமாம், கந்தன்மலர் விந்தந்தனில கந்தும்பணிதந்துந்திரு காட்சிபெற்றுள்ளங் கனிந்துசொல்வாள். (௨௨௮)

சாமியான்செய்த பிழைபொறுத்தென்னையுந் தற்காக்கவேணும் நமஸ்காரம், தஞ்சம்புகழ் நெஞ்சுங்கன ரஞ்சும்பிர பஞ்சந்தனில்தள்ளாமலென்னையாட் கொள்ளுமென்றாள். (௨௨௯)

அற்புதமாகிய கண்மணியேயினிச் செப்புவேன்நான்வந்த காரணத்தை, அம்மயிற்றனி நிலையிற்றுயில் நிலையிற்பலமலைசூற்றிடு மாலுமென்மாமன் மகளல்லவோ. (௨௩0)

முன்னொருசாபத்தால் விபுதைமாதுன்னைப் பெண்ணென்றுபெற்றுவளர்த்தாளே, முறைதங்கிய குறமங்கயர் நிறையும்மதி வரவுந்தலை முனிவனுமொரு மான்வயிற்றில். (௨௩௧)

பின்புசனனங்கொண்டாய்மயிலே யதின்முன்புசரவணப் பொய்கையிலே, பேசுங்களிநேசம்பிர வாசம்பிரகாசந்தர பெண்ணேதிருவவ தாரஞ்செய்தேன். (௨௩௨)

வந்துனிசோவென் றேபயன்கற்பனை தந்திடும்காரணமிதுவல்லவோ, மாதேயடி கோதேமலை யாலேபுவிமீதேயினி மன்மதனும் ரதிபோலவுமே. (௨௩௩)

என்றைக்குஞ்சோடுபிரியாமற்சுகம் கொண்டுகொக்கோகமுறைப்படியே, இருபேருமொரு மனதாகவே குருவுஞ்சிசு வதுபோலவுமேகசையோகமாய் வாழ்ந்திருப்போம். (௨௩௪)

முத்தக்குடியொரு பெண்டுண்டவளிலும் நேற்றியாயுன்னைக்கண் பார்த்திடுவேன், மோகம் வெகு தாகக்கன பாகஞ்சுக போகத்தொரி மெய்குழல்வள்ளியைக் கைகலந்தார். (௨௩௫)

வாலசரவணவேலனும்வள்ளியும் லீலையனேகவிதம்விதமாய், மானுஞ்செயல் தானும்புனல்கானத்தனில்வேடிக்கையாய் மன்மதகேளிக்கையாயிருந்தார். (௨௩௬)

வட்டிப்பாதங்கள் போலவுங்கூடியே விட்டுப்பிரியா தமங்கணமாய், உரிதாய்வெகு பரியாசமேசெரிதாகியவிரிஜோன்மகளொன்றை விட்டொன்றைப் பிரியாமல். (௨௩௭)

நஞ்சண்டகெண்டைபோல்மயங்கி யங்கே கொஞ்சுங்கிளிமொழிவஞ்சியுந்தான், காடுநேசெயல் கூடுங்குயில்பேடுஞ்சரிசேடுந்தானானுன்னைவிட்டுப் பிரியேனென்றாள். (௨௩௮)

நிராதமையல்கொண்டேயிருபேர்களும் மாராதமோகக்கடல்குளித்து, சித்தம்பரி சுத்தம்பெற வைத்துக்கனிமுத்தந்தா தென்றனுலாவியகானகத்தில் (௨௩௯)

சோபந்தெளிந்தகந்தனும்வள்ளியுந் தாவந்தணிந்துவெளியேறி, அறவாகிய குறமானையும் விரைவாகநீ பரண்மீதிலே தோழியர் தம்முடன் சேருமென்றார். (௨௪0)

வந்தநடத்தின் வழியேகுறக்குலப் பைந்தொடி சென்றனள்கானகத்தில், கனவேகமா தெனவேகிய கனியாகிய தினைகுழ்புனம் வந்துகண்டாள்வள்ளி பாங்கியரும். (௨௪௧)

கூந்தலுலர்ந்துகுலைந்ததென்னமுகஞ் சோர்ந்ததினிகண்கள்சிவந்ததென்ன, கோல்பயில்சாலகமனு கூலந்தருமாலிங்கிற கொங்கையெல்லாம் வடுகண்டதென்ன. (௨௪௨)

தண்ணீர்சுனையில்நடந்திடுங்காரணம் பெண்ணேவள்ளித்தாயே சொல்லுமென்று, தயவாயுறை மயமோகுறமயிலேயிது பயிலேகதை சந்தேகமென்றார்கள் பாங்கியர்கள். (௨௪௩)

சொல்லுவேன்கேளடி யன்னமேகண்மணி தோகையேயென்னுயிர்ப் பாங்கியரே, சுனையுந்தக புனையுங்கிழவனையும்பல விளையும்படி சோபத்தைமாற்றித் தண்ணீர்கொடுத்தேன். (௨௪௪)

தண்ணீர்கொடுக்கின்றவேளையிலேவெகு வுன்னிதமாயந்தகானகத்தில், சந்தந்தொனி திக்குஞ்சிலை சித்தம்பயமுற்றங்கனே தாதியும்வாய்விட்டலறிடவே. (௨௪௫)

சிந்தைகலங்கி பயந்தோடியம்மா பைந்தொடியேநான்வரும்வழியில், செடியும்வெகு பொடியும்பல கொடியும்பொழு வழியும்படி தேகமெல்லா முட்கிழித்ததென்றாள். (௨௪௬)

அப்படியேவள்ளி யம்மையுஞ்சொன்னசொல் வொப்பிதமில்லாமல் தோழியர்கள், அதிமோகன ரதியேயொருவிதமாய்முக மதிசோறுது யே துசொல்வாயென்றூர் பாங்கியர்கள். (உ௪எ)

பாங்கிகளிப்படி கேட்டிடவேவள்ளி யேங்கிநின்றூரிந்தவேளையிலே, புருவத்துடனேவேடுவ ரூபத்துடனேவந்துமே பானுக்கெதிர்நின்றேதுசொல்வார். (உ௪அ)

கானெய்தமானிந்தக் கானகந்தன்னிலே தான்வந்துதேயதைக் காணீர்களோ, ஒளியிற்றிடுஞ் சபைபெற்றதோர் மொழிகற்றிடும்வழி பெற்றிடும் நாகரீகமுள்ளதோகையரே. (உ௪௯)

என்றுதான் வேடுவாசனுங்கேழ்க்கவே நன்றுநன்றென்றுதான்பாங்கியர்கள், எங்கள்சிறுபெண்ணென்று நீரிங்கிதத்துட னிங்குவந்தாய்யென்னமொழிசொன்னீர் வேடுவனே. (உ௫0)

மாந்தளிராள் மான் எய்வதுண்டோசும்மா யேன்தான்பொய்கள் சொல்லுகிறுய், நீரெய்திடும்மானுக்கிரு கால்ரண்டுகை மேனத்தொடு காதோலேயும் வர்னச்சேலேயுண்டோ. (உ௫௧)

சொல்லென்றுவேடுவாசனேக் கேட்கவேநல்லதென்று சும்மா தானிருந்தார், சரசத்தொழிலேமிஞ்சிய சரசக்குயிலேயுள்ளதைச் சொல்லென்று வ்ள்ளியைக்கேட்டாரே. (உ௫உ)

ஏதடிபாங்கிகாள் நான்சொல்லும் வார்த்தையைச் சூதென்று சொன்னீரா நீதமாய், எனேநீங்களுந் தனதாகவேமனஞ் சோதிப்பதெதுகாரண மேதுமறியே னெனவுரைத்தார். (உ௫௩)

உள்ளதைச்சொல்லென்று பெங்களுடன்மொழி கள்ளமாய்ச் சொல்வது ஞாயமல்ல, ஒளியாமலேதெளிவாகிநீ மொழிவாய்முகஞ் சுளியாமலே உண்மையைச் சொல்லென்றூர் தண்மையுடன். (உ௫௪)

தன்மையாய்ப்பாங்கிக ளுண்மையைச்சொல்லென நன்மையுடன்வள்ளி நாயகியும், தனமாகியசகிமார்களே வினவொன்றுரு மனதாக்வே தன்கதையைவிள்ள மனந்துணிந்தாள். (உ௫௫)

விள்ளுவன்கேளென் னுயிர்த்துணையாகிய மெல்லிபெனும்சகிமார்களே, விதிகாரணமதினலேயோ எதிமோகமாயொருவேடுவன் வேஷங்கொண்டென்முன்னே வந்ததுவும். (உ௫௬)

வந்தவரென்னுடன் சொந்தமாய் வார்த்தைகள் விந்தையுடன் பேசி நின்றிடவும், வனமேவிய லெனதண்ணார்கள் சினமாய்வரநினே மேவிய வனத்தில்வேங்கைமர மானதுவும். (உ௫எ)

வேங்கைமரத்தையுங் கண்டண்ணரெல்லோரும் வேலன்செயலென்று போனபின்பு, வேறுருபமாய் காடிவந்தெனைக் கூடிடாயென மோடிபேசியே வேடுவாசனுய் நிற்கையிலே. (உ௫அ)

அப்போதுஅன்னர் வருவதறிந்துதான் தப்பாது ஆறுவயது சென்ற, அரிதாகிய பெரியோரென பொறியைம்புல னிடர்நீங்கிய ஆதிசிவனைப்போல் நின்றதுவும். (௨௫௯)

நின்றவளைக்கண்டு அண்ணமார்கூட்டியே நன்றாகநம்மிடம்சேர்த்ததுவும, நினைவாகிய நினைமாலையுந் தனதாகவே மனதாகிய நேர்மையாயுண்டபின் தாகமென்றார். (௨௬௦)

தாகதீரத்தண்ணீர் நான்கொடுத்தேனென்மேல் மோகங்கொண்டார்நானுங் கோபங்கொண்டேன், நானும்வழிகூடியிருட் கானகந்தனில் யானும்வர தந்தியெனும்யானை வந்ததுவே. (௨௬௧)

ஆனைவருவ தறிந்துஅவர்பக்கம் போனேனென்னிட்ட வாராதேயென்றார், அவராசையுநிறைவேறிட உதவாகினேன்பெரிதாகிய யானையும்கானகஞ் சென்றதுவே. (௨௬௨)

சென்றபின்வேலவ ராறுமுகந்தோடு வந்தனரெந்தனுக் காட்சியுடன், தெரிசித்திட வேதந்தனர் பரிசுத்தம தாய்நின்றவர் தேன்மொழியாளுள்ள சேதிசொன்னாள். (௨௬௩)

இப்படியென்றொரு வார்த்தைநீ முன்சொன்னால் தப்பிதஞ்சொல்வமோ மாதாசே, இனிதாயொரு மனதாகவே யுனைமேவியதனதாகின யெல்லோர்க்கு நன்மைதானென்று சொன்னார். (௨௬௪)

சந்தோஷமாகவே பாங்கியரிருவருங் கந்தன்மலர்க்கழல் தான் துதித்துச், சரணாகதியெனவென்றுமே குருநாதனே துணையென்று சாஷ்டாங்கமாகவே தெண்டனிட்டார். (௨௬௫)

தெண்டனிட்டபாங்கி மார்களைப்பார்த்துமே யண்டர்சிறைமீட்டவேலவரும், தேனார்மொழி மானார்களை யானுமே நானென்றுமே தெரியாமலேநீங்கள் செய்தபிழை. (௨௬௬)

உங்கள்மேல்குற்றங்க ளில்லையடிபாங்கி பெண்களாயெங்களிருவருக்கும், உறவாகியதருவீரெனக் குறவாகியதுறைவேலவன் உண்மையைச்சொல்லவே பாங்கியர்கள். (௨௬௭)

சாடையறிந்து வனம்போனார்கந்தன் பேடைமயில்வள்ளி யாளுடனே, தருணமிதுதானென்றுமே கருணையுகந்தேகூடினர் சல்லாபமாகவிருவருந்தான். (௨௬௮)

வள்ளியைக்கந்தன் மருவியவிக்கதை வாசித்துக்கேட்டுமெழுதினோர்கள், வேலனருளாலேமிக பேறும்பெற சிராகவே வாழ்ந்திருப்பார்கள் மனமகிழ்ந்தே. (௨௬௯)

முருகர் ஒயிற்கும்மிப்பாடல்-முற்றிற்று.

---


45551




# மயிர் வளரும் பரிமளத் தைலம்.

இந்தத் தைலத்தில் கொஞ்சம் கையில்விட்டுத் தேய்த்து தலையில் தடவிவர மயிரின் சிவந்தநிறம், சுண்டு. மயிர் வெடிப்பு, மயக்கம், தலைசுழற்றல் முதலிய பித்த சம்பந்தமான வியாதிகளையும் கண்ணெரிவு முதலிய நேத்திர வியாதிகளையும் கண்டித்து மயிரைக் கறுமையாயும் செழிப்பாயும் அடர்த்தியாயும் வளரச்செய்வதோடு சுகந்தவாசனையையும் மயிர்க்கால், கண். மூளை இவைகளுக்கு குளிர்ச்சியையும் கொடுத்துப் பித்தசாந்திசெய்து இரவில் சுகமான நித்திரையைக் கொடுக்கும் இவை நாளடைவில் உபயோகித்துவந்தால் பித்தத்தால் நரைத்த மயிர்களும் கறுக்கும் இதை ஒருதடவை உபயோகித்தவர்கள் மறுபடியும் இதை கைவிடார்களென்பது திண்ணம் ஸ்திரீகள் புருஷர்கள் யாவரும் உபயோகிக்கலாம் இந்த தைலத்திற்கு வேறு சில எண்ணெய்களைப் போல மயிரை உதிர்த்தல் முதலிய கெட்டகுணங்க ளில்லையென்று உறுதியாய் சொல்லுகிறோம்.

இதன் விலை ரூபா 1.

என்னுடைய பெயர் கேட்கவேண்டுமானால் அரையணா ஸ்டாம்பு அனுப்பினால் அனுப்பப்படும்.

இப்படிக்கு,

பி. நா. லோகநாதமுதலியார்,

நாராயணவில்லா

நெ-17-18, படவேட்டம்மன்கோவில்வீதி,

பெரம்பூர் பாரக்ஸ் போஸ்டு மதராஸ்.